வெளியீடு எண் 388




உ

சிவமயம்

# திருக்கடவூர்

( மகாகும்பாபிஷேகம் )



இது

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

திருவுள்ளப்பாங்கின்வண்ணம்

ஹேவிளம்பிஸூ சித்திரைமீ ௯உ (21—4—'57) ஞாயிற்றுக்கிழமை நடைபெறும்

திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி தேவஸ்தான

மகா கும்பாபிஷேக நினைவு மலராக

வழங்கப்பெற்றது.




தருமபுர ஆதீனம்

1957



திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
25 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்




உ
சிவமயம்

# நூன்முகம்

இன்பத்தை விரும்பும் உயிர்களுக்கு இன்பத்தையருளு வது இறைவன் திருவடி ஒன்றே. அதனைத் தேளிவுறுத்தும் திருநேறியே சைவ சித்தாந்தம். இந்நேறி தலைப்பட்ட இனிய அமுதப் பாக்களே நம் சமயாசாரியர்களின் அருள்மொழிகள். ஞானசம்பந்தப்பெருமானே ' திருநேறிய தமிழ் ' என்றார்கள். திருநேறி மேவிய தெய்வத் தமிழை உணரவும் சுவைக்க வும் ' ஒருநேறிய மனம் ' வேண்டும். அந்த மனம்தான் அழியாத பேரின்ப வாழ்வுக்கு - இறவாத பேருவாழ்வுக்கு அடிப்படை. இத் திருநேறியை வளர்ப்பதும் விளக்குவதும் திருக்கடவூர் என்னுமித் திருத்தலமாகும். ஞானத் திருநக ராகிய இங்கே வீற்றிருக்கும் ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி ஆலயம் தருமையாதீனத்தின் அருளரசுக்கு உட்பட்டது. தருமபுர ஆதீனம் இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இத் திருக்கோயிலின் திருப்பணிகளைச் சேவ்வையுறப் புரிந்து, அஷ்டபந்தனம், சோர்ணபந்தனம், ரஜதபந்தனம் சேய்வித்து பணிகளின் முற்றிய பேருக இம்மகா கும்பாபிஷேகத்தை நிகழ்த்துவித்தருளினார்கள்.

விழா மலராக இந்நூல் வேளிவருகிறது. இத் தலத்துச் சிறப்புக்களும், கும்பாபிஷேகப் பேருண்மைகளும் இந் நூலுள் விளக்கப்பேற்றிருக்கின்றன.

கும்பாபிஷேகத்தைத்தரிசித்த மேய்யன்பர்கள் இருமைப் பயன்களும் எய்துவராக ! வாழ்க ஸ்ரீ அமிர்தலிங்கப் பேருமான் திருவடி ! வாழ்க உலகம் !

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
அருளாணையின்வண்ணம்,
**மகாலிங்கத் தம்பிரான்,**
கட்டளை விசாரணை.

திருக்கடவூர்
தேவஸ்தானம்
15—4—'57



ஸ்ரீ அமிர்தகடேசுவரர்



ஸ்ரீ காலசம்காரமூர்த்தி

341

உ
சிவமயம்

# திருநெறி வளர்க்கும் திருக்கடவூர்

காணாத அருவினுக்கும் உருவினுக்குங் காரணமாய்
நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாஞ் சிவலிங்கம்
நாணாது நேடியமால் நான்முகனுங் காணாநடுச்
சேணாருந் தழற்பிழம்பாய்த் தோன்றியது தெளிந்தாராய்.

**இன்பம் துன்பம் :**

இன்பம் துன்பம் இரண்டுமே உலகம். ஒளி இருள் இரண்டாலுமே உலகம் இயன்றிருக்கிறது. மேடு பள்ளம் இரண்டுந்தாம் மேதினியில் இடம் பெற்றிருக்கின்றன. எங்கு நோக்கினாலும் இவ்விரண்டின் ஆட்சிதான். மனிதனுக்கு வாழ்வளித்த பேரா இயற்கைப் பெருங்கூத்து இவ்விரண்டினையுமே மனிதனின் அடிப்படையாக அமைத்திருக்கின்றது. இன்பத்தால் எக்களித்து முனைப்பு மேலிட்டு, தற்போதம் மிகுத்துக் கெட்டுவிடாமல், துன்பத்தால் துயருழந்து மனத் தளர்ச்சி மிகுந்து சோர்வு மேலிட்டு வாடிவிடாமல் குறிக்கோள் தவறாமல் வாழ்வுப் பாதையில் மனிதன் செல்ல வேண்டியிருக்கிறான். இதை உணர்ந்துவிட்டால் மனிதமனம் திருந்தும், நிலைக்கும், இயங்கும். இதை உணராதபோது மனிதமனம் களைக்கும்; சளைக்கும், இனிதாக இயங்காது. இது நமது முன்னோர்கள் சொல்லாமற் சொல்லி வைத்த இரகசியம்.

**இனிய காணுக :**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒருநாள் தமிழகத்து வீதியிலே தளர்ந்த நடையோடு வருகிறார் ஒரு புலவர். அவரது நரைமுதிர் யாக்கை அவரை ஒரு முதுபெரும் புலவரென்று நவில்கிறது. நெற்றியில் சுருக்கங்கள், சிந்தனை தேங்கிய

திருமுகம், கையில் ஏடும், எழுத்தாணியும். ஆம்; இப்படி வருகிறது அப்புலமை விளக்கு. வீதியில் வருவோர் போவோர்களையெல்லாம் கூர்ந்து நோக்குகின்றன அவரது கூர்விழிகள். சுற்றுப்புறங்களைச் சுழன்று சுழன்று பார்க்கின்றது அவரது இனிய திருமுகம். உண்மை நாடும் ஆள்வினை தலைப்பட்டவர் அவர் என்பதனை அவருடைய ஒவ்வொரு உறுப்பும் காட்டுகிறது. அப்போது அவ்வீதியிலே இரண்டு இல்லங்கள் அவரைப்பெரிதும் கவர்கின்றன. நிற்கிறார். நேடிது நோக்கி நெடுமூச்செறிகிறார். ஓர் இல்லத்தில் பிணப்பறை எழுந்தோலிக்கிறது; இன்னொரு இல்லத்தில் இனிய இசைக்கேற்ற தண்ணிய ஓசை மிக்க தண்ணுமை முழங்குகிறது. '' என்னே மாறுபட்ட உலகம்! ஒருபால் இன்பமும் ஒருபால் துன்பமுமாக அல்லவா உலகம் இயங்குகிறது! ஆம் '' இப்படி எண்ணமிட்டிருக்க வேண்டும் அவர்; மேலும் நடக்கிறார். இனிய மாலைக்காலம் அது. காதலனைப் புணர்ந்த களிப்போடு காதலியர் பூக்களால் தம்மை அழகு செய்து கோள்ளும் காட்சி ஒருபக்கம்; ' ஆகா! எவ்வளவு இனிய காட்சி ! ' சற்று தூரத்தில் அவர்க்கு இன்னொரு அதிர்ச்சி காத்திருக்கிறது. அங்கே காதலனைப் பிரிந்த காதலியர், பூவணியிழந்து, புலம்பிய கண்ணோடு, வாடிய மலராய், ஒய்ந்துகிடக்கும் யாழாய்த் தனிமைத் துயரால் தவிக்கும் மங்கையரைக் காண்கிற அவர் வேதும்புகிறார். ' ஆம்; என்ன உலகம் இது,' இன்பமும் துன்பமுமாக அன்றோ இதனைப் படைத்திருக்கின்றான், படைத்தவன்! ஏன் ? துன்பமயமானது இவ் உலகம் ' என்று சிந்திக்கின்றது அப்பாவலர் சிந்தனை''. '' அப்படியானால் கோடிய இவ்வுலகில் வாழ்வோர்க்கு வகையே இல்லையா? உய்வே கிடையாதா? உண்டு. இன்னாத இவ்வுலகிடையே வாழ்வோர் இனிய வீட்டின்பத்தைக் காணமுயறல் வேண்டும். அதுவே இதனினின்று தப்புதற்குற்ற பேருவழியாகும் '' என்று முடிவு கட்டுகிறது அவர் இதயம். பக்குடுக்கை நன்கணியார் என்ற அப் பைந்தமிழ்ப் புலவரது கருத்தோவியம் புறநானூற்றிலே தீட்டப் பேற்றிருக்கிறது.

'' ஓரில் நேய்தல் கறங்க ஓரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூவணியணியப் பிரிந்தோர்
பைதல் உண்கண் பனிவார்புறைப்பப்
படைத்தோன் மன்ற அப் பண்பிலாளன்

34-1

இன்னுதம்ம இவ்வுலகம்
இனிய காண்கஇதன் இயல்புணர்ந்தோரே ” (194)

உலக இயற்கையின் கோடுமையை நம் சங்ககால முன்னோர் எத்துணை நுண்ணிதாக உணர்ந்திருந்தனர் என்பதற்கு இது வோர் எடுத்துக்காட்டு.

**அவிநாசிக் காட்சி :**

இவ் வண்ணமே சுந்தரமூர்த்தி அடிகள் அவிநாசியிலே முதலே உண்டபுதல்வனை அழைத்தபோது சேக்கிழார் பாடுகிறார். இரண்டு இல்லங்களில் மாறுபட்ட ஓசையைக்கண்டு சிந்தனை புரிகின்றார் அடிகள்.

“ நிறையும் செல்வத் தெதிர்மனைகள்
இரண்டில் நிகழ்மங்கல வியங்கள்
அறையும் ஒலியோன் றினில்; ஒன்றில்
அழுகை ஒலிவந் தெழுதலும் ”
(பெரிய - வெள்ளானை-5)

என்ற பகுதியையும் முற்கூறிய சங்கப் பாடற் கருத்தினோடு ஒப்பிட்டு உணரலாம்.

**மணப்பறையே....**

நாலடியார் இதனைவிட இன்னும் சீரிதாய் இன்ப துன்பங்களை இயம்பியுள்ளமை எல்லோரும் அறிந்தவொன்றும். மணப்பறையே பிணப்பறையாய் மாறி ஒலிக்கும் அமங்கல நிகழ்ச்சியும் இவ்வக லுலகில் நிகழாமல் இல்லை யேன்பது இங்கே காண்கின்ற செய்தி.

“ மன்றங் கறங்க மணப்பறை யாயின
அன்றவர்க் காங்கே பிணப்பறையாய்—பின்றை
ஒலித்தலும் உண்டா மேன்றுய்ந்து போமாறே
வலிக்குமா மாண்டார் மனம் ” (23)

இவற்றால் இவ்வுலகின் இயல்பை நாம் உள்ளபடி உணரமுடியும். இவ்வியல்பை உணர்ந்தவர்கள் இதனினும் இனிய வீட்டுலக இன்பத்தை நாடுதல் தலையான கடனாகும். இல்லையேல்

இதனுள்ளேயே உழன்று துன்பவலையிற் சிக்கிக் கெட்டொழிதல் ஒருதலை.

**திருவடிப்பேறு :**

வீட்டின்பத்தை நாடுதலைச் சைவ சித்தாந்தம் ' திருவடிப் பேறு ' என்கின்றது. திருவடிப்பேறே வீட்டுநெறி. வீட்டுநெறி தலைப்பட்ட நம் சமயகுரவர்கள் அனைவரும் திருவடிப்பேற்றையே வேண்டி உருகுதல் இதனை வெளிப்படுத்தும். இன்பம் வேண்டி அலையும் உயிரினத்துக்கு இதுவொரு விழுமிய மருந்தல்லவா? இன்ப வேட்கையின் காரணமாக எங்கெங்கோ திரிந்து, கெட்டுச் சிதையும் உயிரினத்தின் மேல் வைத்த ஒரு பெருங் கருணையால் நமது அருளாளர்கள் இத்திருவடி யின்பத்தையே பெரிதும் புகழ்ந்துள்ளதனை நாம் நன்கு கூர்ந்து சிந்தித்தல் வேண்டும்.

அந்த இடையருத சிந்தனையே நம் பந்தபாசங்களைத் துடைத்து அந்தமில் இன்பம் அருளவல்லது; இருவினை துடைத்துத் திருவினையருளும் திறமிக்கது. ஆயின் அச் சிந்தனைக்கு உறுதுணை புரிவனவே ' மாலற நேயமும், மலிந்தவர் வேடமும், ஆலயந்தானும் '. ஆலயங்களில் உயிரினங்கள் காணத் திருமேனிகொண்டு பெருமான் வீற்றிருக்கின்றான். வேண்டிய வேண்டியாங்கு அருள் புரிகின்றான்.

**விருப்பும் வெறுப்பும் :**

உயிர்களது விருப்பத்தில் முதற்படியில் நிற்பது வாழ்வுதான்; எனக்கு நல்லவாழ்வு வேண்டும் என்றே யாவரும் வேண்டுவர். யாரையாவது நீ ' இறக்க விரும்புகிறாயா ' என்று கேட்டுப் பாருங்கள். விரும்புவார்களா இறப்பை? விரும்பமாட்டார்கள். ஆகவே அடிப்படையாக ஆராய்ந்தால் உயிர்கள் அனைத்தும் 'விரும்புவது உயிரை; வெறுப்பது இறப்பை' என்று துணியலாம்.

' சாதலின் இன்னாததில்லை ' என்றார் திருவள்ளுவர். சாதலை மரணம் என்பர். மரண பயம் எல்லோரையும் ஆட்டிப் படைக்கிறது. ஒவ்வொருவனும் தான் வாழவேண்டுமென்று விரும்புகிறான். நோயால் தொலையுற்று இன்றோ நாளையோ என்றிருக்கும் பிணியாளனுக்கும் வாழ்வில் ஆசையிருக்கிறது. கூனிக்

குறுகிக் கோல் காலாகிக் குந்தி நடந்து நோந்து இருமியேங்கி நுரைத்தேறும் முதியவர்க்கும் வாழ்வில் விருப்பம் இல்லாமல் இல்லை. ஆனுல் சாதலே யாராலாவது தவிர்க்க முடிகிறதா பாருங்கள் ; அது ஒரு தவிர்க்க முடியாத தோல்லையாகவே இருக்கிறது. வாழவும் விருப்பமிருக்கிறது ; வாழவும் முடிவ தில்லை ; ஆம் ! இவ்வளவே உலகம் எனலாம்.

'தோற்றம் உண்டேல் மரணம் உண்டு
துயரமனை வாழ்க்கை'

என்ருர் சுந்தரமூர்த்தி அடிகள்.

'உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு'

என்ருர் திருவள்ளுவர்.

'பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்றதுண்மையின்'

என்ருர் இளங்கோவடிகள். எனவே உலக இயல்பாக இருக்கிற இது நம்மளவில் இயல்வது அன்று என்ற ஓர் நம்பிக்கை நமக்கு இருக்கிறது. இதனை இயக்குபவன் இறைவன் ஒருவனேயாவான். அவனே காலனுக்கும் காலனுக விளங்குபவன். அவனது திருவடிப்பேற்றை அடைந்தாலொழிய வாழ்வில் நிலைத்த இன்பம் காண இயலாது. மரணமிலாப் பெருவாழ்வு அடைய இயலாது; பிறப்பு இறப்பு அற்ற பேரானந்தப் பெருங்கடலில் நாம் துளைந்து ஆட இயலாது என்பதனை நம் அநுபவ ஞானியர் கூறியுள்ளார் கள். அத்திருமொழிகளே நமக்கு வழிகாட்டித் துணை புரிவன. பிறவிக் கடலிலிருந்து நம்மைக் கரையேற்றக் கரங் கொடுப்பன. என்றும் நிலைபேறுடைய நம் உயிர்க்கு மாறிமாறிவரும் இம் மரணத் துன்பத்தை நீக்க அந்த ஆசிரியர்களாகிய அவர்கள் திருமொழியே உதவிபுரிவன.

**திருக்கடவூர் :**

சமய குரவர்களது அவ்வண்ணமாகிய திருப்பாடல் பெற்ற நம்நாட்டுத்தலங்கள் பலவற்றுள்ளும் சோழவளநாட்டுத் தஞ்சை

மாவட்டம் மாயூரம் பிரிவைச் சார்ந்த திருக்கடவூர் மரண பயத்தைப்போக்கும் திருத்தலம். திருநேறி வளர்க்கும் திருக் கடவூர்; திருநேறி சிவநேறியாகிய அருள்நேறியே அல்லவா? அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்று. மனிதர்களின் வாழ்நாளை நீட்டிக்கும் குன்றுத பேரருட்குன்றுக இங்கே வீற்றிருக்கின்றுன் இறைவன். தன் மறக்கருணைத் திறத்தை இயமன் வாயிலாக வேளிப்படுத்திய திருவருள் வீறு இத்தலத்தின் சிறப்பு.

மறக்கருணை :

அன்னை குழந்தையை அடிக்கிருள்; முதுகுநோவ அடிக் கிருள்; அலற அலற அடிக்கும் அவ்வன்னையின் உள்ளந்தான் எப்படி ? பத்துத் திங்கள் சுமந்திருந்து பேற்றுப் பால் நினைந் தூட்டும் தாய் தான் அவள். அணைக்கவேண்டிய கரங்களால் அடித்துப் புடைக்கும் அவள் மனத்தில் அன்பு வற்றி விட்டதா? பாசம் பறந்துவிட்டதா மனத்தைவிட்டு’! இல்லை; அக்குழந்தை வாழவேண்டும்; திருந்தவேண்டும்; வளரவேண்டும் என்பதே அவள் ஆசை; . இதய தாகம். இவ்வாறேதான் இறைவனின் மறக்கருணை. இறைவன் அறக்கருணையால் ஆன்மாக்களை ஆட்கோள்ளும் திறத்தோடுமட்டுமின்றி மறக்கருணை புரிவது இவ்வடிப்படையில்தான். இம்மறக்கருணைத் திறத்தை மாநிலம் உணர மாதேவன் நிகழ்த்திய திருத்தலங்களே வீரட்டத் தலங் கள். அவை எட்டு. அவற்றுள் கூற்றுவனை முன்வைத்து இறைவன் மறக்கருணை புரிந்த திருத்தலம் இத்திருத்தலமாகும்.

பெயர்கள் :

திருக்கடையூர் என்று மக்களால் இன்று வழங்கப்பேறு கின்றது. தலையூர், இடையூர், கடையூர் என்று தமிழகத்து ஊர்கள் சில வழங்கின எனவும், அவற்றுள் இது காவிரிப்பூம் பட்டினத்தை ஒட்டிக் கடையூர் என்று வழங்கப்பேற்றது எனவும் ஒரு சாரார் கூறுவர். மற்றுெரு சாரார் ஆண்டவன் அமுதக் கட (குட) மாக விளங்கினமையின் இது கடவூர் என்பர். எமனைக் கடாவியவூர்க் கடவூராயிற்று எனலுமாம். இறைவனும் அமிர்த கடேசன் என்று திருநாமந் தாங்கியுள்ளான். புராணப் பேயர் களாக வில்வவனம், பிஞ்சிலவனம் என்பனவும் அமைகின்றன.

**மூர்த்தி :**

இறைவன் அமிர்தலிங்கமாகவும், இறைவி அபிராமித் தாயாகவும், எழுந்தருளி யுள்ளனர். கள்ளவாரணப் பிள்ளையார், முருகன், இலக்குமி, சோமாஸ்கந்தர், நடராசர், வில்வவனநாதர், பிட்சாடனர், பைரவர். பஞ்சபூதலிங்கங்கள், சூரியன், அகத்தியர் சந்தனபூடண மன்னன், ஏழு கன்னியர், அருள்பெற்ற இயமன், அறுபத்துமூவர், முதலிய திருவுருவங்களும் உள்ளன. அருள் பெற்ற மார்க்கண்டேயர் திருவுருவமோ என்று எண்ணும் நிலையில் தெற்குத் திருச்சுற்று அடிமதிலில் ஓர் திருவுருவம் இருப்பது ஆய்தற்குரியது! கால சங்காரக்கடவுள் இயமனை உதைத்த திருக்கோலத்தோடு திகழுதல் பெருஞ்சிறப்பு. இவரை வழிபடுவோர் வாழ்நாள் பெருகி வளம்பல பெற்று வாழ்தல் கண்கண்ட காட்சியாகும். ‘ காலக் கடவுட்கு உயர்கமா வலனே ’ என்ற பதிற்றுப்பத்துக் கடவுள் வாழ்த்துப் பகுதியை நினைப் பூட்டி நிற்கும் இத் திருக்கோலம். காலன் மாய்தலால், கோள் களும் வலியற்றன ஆதலின், நவக்ரகங்கள் இத் தலத்தில் இல்லை. நவக்ரக சாந்தி முழுதும் சம்காரமூர்த்தி சந்நிதியிலேயே செய்யப்பெறுதல் இவ்வூருக்குரிய தனிச் சிறப்பாகும்.

**தீர்த்தம் :**

தீர்த்தமாடுதல் தமிழ் நெறிக்கே சிறந்த மரபாகத் தோன்று தோட்டு விளங்கிவருவதாகும். தெற்கே குமரியாடுதல், வடக்கே கங்கையாடுதல் பெருஞ் சிறப்பினவாகப் பண்டு கொள்ளப்பெற் றிருந்தன. ‘ குமரியாடிப் போந்தேன் சோறுதாரும் ’ என்ற இலக்கணச் சொற்றொடரை அறியாதார் யார் ? தீர்த்தமாடுங்கால் திருவருள் நினைவோடு மூழ்குதல் வேண்டும். பரம்பொருளிற் றோய்கின்றோம் என்ற நினைவு நீங்கலாகாது. புனலாகி நிற்கும் பெருமானின் திருமேனியோடு ஒன்றுகின்றோம் என்ற உள்ளநிலை உண்டாதல் வேண்டும்.

‘ எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
போங்கு மடு ’

என்பது திருவாசகம் அல்லவா ? திருக்கடவூர்த் திருத்தலத்தும் அமிர்தபுட்கரிணி, காலதீர்த்தம், மார்க்கண்டேயதீர்த்தம், காவிரி

தீர்த்தம் என்ற தீர்த்தங்கள் புறந்தூய்மை, அகந்தூய்மை தந்து போலிகின்றன.

**வாழ்ந்து வழிபட்டோர் :**

'நாடாயிருந்தாலும் காடாயிருந்தாலும், மேடாயிருந்தாலும் பள்ளமாயிருந்தாலும் என்ன ? எங்கே ஆடவர் நல்லவராய் உள்ளனரோ அந்நிலமே நல்லது' என்ற கருத்துப்பட உள்ள புறநானூற்றுச் சொல்லோவியம் இங்கு எண்ணி உணர்தற்கு உரியது.

'நாடா கொன்றே காடா கொன்றே
அவலா கொன்றே மிசையாகொன்றே
எவ்வழி நல்லவராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே'

என்ற அப் பாடல் ஔவையாரின் அறிவுரைச் சித்திரம். இக் கடவூர்த் திருத்தலத்தும் அருளாளர்கள் பலர் வாழ்ந்துள்ளனர். அவர்கள் வாழ்ந்த தெய்வீகச் சிறப்பினாலேயே இன்றளவும் இத் திருத்தலம் திருவருள் பொங்கித் ததும்பும் திருத்தலமாகத் திகழ்கின்றது. சமய குரவர்கள் மூவர் தேவாரத் தீந்தமிழும் இத் தலத்திற்கு உண்டு. குங்கிலியக்கலய நாயனார், உய்யவந்ததேவ நாயனார், மார்க்கண்டேயர், காரி நாயனார், அபிராமிபட்டர் ஆகிய அநுபவ ஞானியர் இத் தலத்தே வாழ்ந்து வழிபட்டனர்.

**இலக்கியம் :**

இலக்கியம் இல்லாத ஊருக்குப் பெருமை இல்லை. இலக்கியப் பெருமையே இணையற்ற பெருமை. காரிக்கோவை, தேவாரம், அபிராமி அந்தாதி, கள்ளவாரணப்பிள்ளையார் பதிகம், அமிர்தகடேசர் பதிகம், காலசம்மாரப் பின்முடுகு வெண்பா, திருக் கடவூர் உலா முதலிய இலக்கியங்கள் இத் திருத்தலத்தே எழுந் தன. இவற்றுள் காரிக்கோவை கிடைக்கவில்லை. தேவாரப்பாக்கள் திருமுறையில் திகழ்ந்து ஒளிவிடுகின்றன. உய்யவந்ததேவ நாயனார் திருவாக்கு மெய்கண்ட சாத்திரத்துள் மிளிர்கின்றது. அபிராமி அந்தாதி ஈழத்திலும் தமிழகத்திலும் சக்தியை வழிபடு வோர்க்குச் சிறந்த சாதன இலக்கியமாக ஒளிர்கின்றது. எனவே

சாத்திர இலக்கியமும், தோத்திர இலக்கியமுமாகத் திருக்கடவூர் தமிழகத்துக்குத் திருநெறி வழங்கி நிற்கின்றது எனலாம்.

**திருவிழாக்கள் :**

கார்த்திகைத்திங்கள் சோமவாரத்தில் 1008 சங்காபிஷேகம் அமிர்தலிங்கப்பெருமானுக்கு நிகழும். மார்க்கண்டேய தீர்த்தத்துப் புனிதநீர் இச் சங்குகளில் நிரப்பப்பெற்றுப் பூசனை பெற்று மந்திரவலிமிக்குப் பொலியும். காலசங்காரக்கடவுள் சித்திரைத் திருநாளில் ஆறுந் திருநாளன்று வீதிகளுக்கு எழுந்தருளுவார். திருவிழாக் காலங்களில் நாடெங்கணுமுள்ள நல்லன்பர்கள் வந்து பரவியேத்தி இருமைப் பயனும் எய்துவர்.

**கல்வெட்டுக்கள் :**

திருக்கோயிலில் சுற்றுமதில்களிலும், கருப்பக்கிரகத்திலும் பல கல்வேட்டுக்கள் உள்ளன. அரசியலார் இவற்றைப் படியெடுத்திருக்கின்றனர். படியெடுக்கப்பெற்ற கல்வேட்டுக்கள் ஐம்பத்துநான்கு. முதலாம் இராசராசன் காலம் முதல் மூன்றும் இராசராசன் காலம் வரையுள்ள சோழ மன்னர்கள் காலத்துக் கல்வேட்டுக்கள். பாண்டிய மன்னர்களில் வீரபாண்டியன், சுந்தரபாண்டியன், குலசேகரபாண்டியன் ஆகிய மூவர் கல்வேட்டுக்கள். விஜயநகரப்பேரரசுக்கும் இத் திருக்கோயிலுக்கும் தொடர்பு இருந்த செய்தியும் இக் கல்வேட்டுக்களால் புலப்படுகின்றது. கிருஷ்ணதேவராயரும், விருப்பண உடையாரும் என்ற இருவர்பற்றி அறிவதற்கு இத்திருக்கோயிற் கல்வேட்டுக்கள் துணைபுரிகின்றன. சேயங்கொண்ட சோழவளநாட்டு ஆக்கூர் நாட்டுக் கடவூர் எனவும் பிறவாறுகவும் குறிக்கப்படுகின்றது. ஆக்கூர் ஒரு சிறந்த திருநகராக இருந்ததென்பதும் அது ஒரு நாடாகவே கருதப்பட்டதென்பதும், அதனுள் திருக்கடவூர் ஒரு ஊராக இருந்தது என்பதும் இவற்றிலிருந்து அறியப்படும். அன்றியும் வளநாடு, நாடு ஊர் என்ற பகுப்பு முறை அக்காலத்தே இருந்தது எனவும், வளநாடுகள் மன்னர் பெயரால் வழங்கப்பெற்றன எனவும் அறியலாம். கோழும்பு மன்னன் ஒருவன் திருக்கடவூர்க் கோயிலைக் கட்டினன் எனவும், இக் கோற்றவன் காலகாலதேவர் மேல் இயற்றிய ஓர் பாடல் மூன்றுங் கோபுரத்தில் உள்ளது எனவும் கூறுகின்றனர்.

**சம்பந்தரும் திருக்கடவூரும் :**

திருஞானசம்பந்தர் அம்பர்மாகாளம் முதலிய திருத்தலங்களை வழிபட்டு அடியவர்களோடு திருக்கடவூர் அடைந்தார் ; திருநாவுக்கரசரும் வந்தார். பல பதிகளை வணங்கிக் கோண்டுவந்த ஆளுடையபிள்ளையாரையும், ஆளுடைய அரசரையும் குங்கிலியக்கலய நாயனுர் எதிர்கோண்டு வரவேற்று விருந்து அளித்தார். கடவூர் வீரட்டத்துப் பெருமானைச் சம்பந்தர் போற்றிச் ' சடையுடையான் ' என்று திருப்பதிகம் பாடினுர். இவ் வரலாற்றுக் குறிப்பினைப் பாட வந்த சேக்கிழார் மிக்க அழகாகப் பாடுகின்றனர். ' காலனை உதைத்து உருட்டிய செய்ய பொற்சிலம்பணி தாமரை ' என்ற தொடரால் இறைவன் திருவடியின் அருளாற்றலை இயம்புகின்ருர்.

வழிபடுவோர் ' பற்று அறுப்பவர் ' என்று திருஞானசம்பந்தரை இவ்விடத்தே அழைத்துள்ளார்.

' மற்றவண் பதியணைந்து வீரட்டத்து மழவிடையார் கோயில்
சுற்றுமாளிகை வலங்கோண்டு காலனை உதைத்துருட்டிய செய்ய
போற்சிலம்பணி தாமரை வணங்கிமுன் போற்றி உய்ந்தெதிர்நின்று
பற்றறுப்பவர் ' சடையுடையான் ' என்று பதிக இன்னிசைபாடி '

(பெரிய - திரு - 534)

திருஞானசம்பந்தர் சடையுடையானும் என்ற பதிகத்து ஒவ்வோர் பாடலிலும் இறைவனின் தன்மைகளை எடுத்தோதித் திருக்கடைக் காப்புச் செய்யுளில் பதிகப் பயன் கூறுங்கால் ' பாடியாடக் கேடும் பாவமே ' என்றருளியுள்ளார். பாவம் கேடும் என்று அருளிய அதனை உட்கோண்டே சேக்கிழார் வழிபடுவோர் ' பற்றறுப்பவர் ' என்று அழைத்துள்ளனராதல்வேண்டும்.

திருக்கடவூர்ப் பெருமானை விட்டுப் பிரியச் சம்பந்தர்க்கு உள்ளம் வரவில்லை. நண்புக்கினியவராகிய குங்கிலியக்கலயரது நல்லுறவும், இறைவன்பால் வைத்த ஈடற்ற காதலுமே அதற்கு உற்ற காரணங்களாதல் வேண்டும். அன்பும் நட்புமாகிய இரு பண்பும் அவரைத் திருக்கடவூரைவிட்டுப் பிரிதலில் மனந்தளரச் செய்திருக்கின்றன. சேக்கிழார் ' பரவி ஏத்தி அங்கு அரிதினிற் போந்து ' (535) என்கின்ருர் ; அதற்குற்ற காரணத்தை

குறிப்பிப்பாராய், ‘ விரவு நண்பு உடைக் குங்கிலியக் கலயர் ’ என்று கூறி, அதற்கு மேலும் கலயரது விருந்தோம்புந் திறத்தையும் கனிந்த பண்பினையும்,

‘ கரையில் காதல் மற்றவர் அமைத்தருளிய விருந்து
இனிது அமர்ந்து ’

என்ற தொடரால் புலப்படுத்தியுள்ள திறம் உன்னுதற்குரியது. கரையற்ற அன்புக் கடலாகிய வடிவினுல் அப் பேரன்பர் அளித்த பெரிய விருந்தைச் சம்பந்தர் இனிது விரும்பி ஏற்றுக் கொண்டார். திருக்கடவூர்த் திருமயானத்தையும் பணிந்தார் ; அங்கே ‘ வரிய மறையர் ’ என்ற திருப்பதிகம் பாடினுர். ‘ இரவும் பகலும் பரவி நினைவார் வினைகள் இலரே ’ என்ற திருக் கடைக்காப்போடு இலங்குகின்றது அவ்வினிய பதிகம்.

**அப்பரும் திருக்கடவூரும் :**

திருநேரிசையில் கடவூர் வீரட்டனுரைத் தாம் கண்டு தெளிந்த நெறியை அப்பரடிகள் அருளியுள்ளார். குங்கிலியக் கலயனுரது விளக்குத் தூபத் தொண்டினை நேரில் கண்டு அவரோடு உறவாடும் வாய்ப்பும் பெற்ற அப்பரடிகள் அத் தொண்டினை இப் பதிகத்துள் போற்றிப் புகழ்ந்துள்ளார். ‘ பொள்ளத்த காய மாயப் பொருளினைப் போகமாதர் வெள்ளத்தைக் கழிக்க வேண்டில் விரும்புமின் விளக்குத்தூபம் ’ என்பது உலகவர்க்கு அடிகளின் அறிவுரை. அவ்வாறு விளக்கிடுவதோடு அகவிளக்கும் இடுமின் என்னும் அடிகள் ‘ உள்ளத்த திரியொன்றேற்றி உணருமாறுணரவல்லார் கள்ளத்தைக் கடவூர் வீரட்டனுர் கழிப்பர் ’ என்று பயன் கூறியுள்ளார். ‘ பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி அரும்பொடு மலர்கள் கொண்டு ஆர்வத்தால் விரும்பிநல் விளக்குத்தூபம் விதியினுல் இடவல்லார்க்குக் கரும்பினிற் கட்டிபோல்வர் கடவூர்வீரட்டனுர் ’ என்பதும் அடிகளாரின் உபதேசம். மேலும் ‘ பொருந்திய குரம்பை தன்னுட் பொய்ந்நடை செலுத்துகின்ற ’ பூதலத்தவர்க்கெலாம் இடித்துக் கூறிக் ‘ கருத்தினில் இருப்பர் ’ என்று கனிந்த நெறிதன்னைக் காட்டுகின்றுர் அப்பரடிகள்.

‘ மாலினைத் தவிர நின்று மார்க்கண்டற்காகவன்று
காலனை உதைப்பர் போலும் கடவூர் வீரட்டனுரே ’

என்று மார்க்கண்டேயர்க்கு அருள்புரிந்த திருவருளையும் அடிகள் பரவியுள்ளார்.

‘ வெங்கூற்றம் பதைப்ப உதைத்துங்ஙனே
உருட்டிய சேவடியான் ’

என்றும்,

‘ தோடர்ந்தடர்ந்தோடி வந்த
காலனைக் காய்ந்த பிரான் ’

என்றும், கடவூர் உறை உத்தமனின் அருட்புகழைத் திருவிருத்தத்தே அடிகள் தோடுத்துள்ளார்கள். திருக்குறுந்தோகையிலும் ‘ கனைக்கும் ஆனைகண்டீர் கடவூரரே ’ என்று இறைவன் தன்மையை அநுபவ ஞானம் தோய்ந்த அருந்தமிழாக்கியுள்ள அடிகளுக்கு என்ன கைமாறு நாம் செய்வோம் ; அவர்கள் அருளிய அகங்கனிந்த பாமலர்களால் அமிர்தலிங்கப்பெருமானை அருச்சிப்பதல்லால் வேறு ஒன்றும் இல்லையல்லவா ?

**சுந்தரரும் திருக்கடவூரும் :**

சுந்தரமூர்த்திகள் தம்வாழ்வினைத்துணையாக-விழுத்துணையாக வீற்றிருக்கும் கடவூர் உறையும் உத்தமனைக் கண்டு உருகி உருகி வழிபட்டிருக்கிறார்கள். ‘ அடிகேள் ! என்னமுதே எனக்கார்துணை நீயலதே ’ என்று பாடல்தோறும் கேட்கிறார்கள். ‘ உயிர்கோடுத்தாய் மறையோனுக்கு ’ என்று மார்க்கண்டேயர் வரலாற்றை நினைவு கூர்கின்றார்கள். திருக்கடைக்காப்பிலே,

‘ காராரும் போழில்சூழ் கடவூர்திரு வீரட்டத்துள்
ஏராரும் இறையைத் துணையாவேழில் நாவலர்கோன்
ஆரூரன் அடியான் அடித்தோண்ட னுரைத்ததமிழ்
பாரோர் ஏத்தவல்லார் பரலோகத் திருப்பாரே ’

என்று அருளினார்கள். ‘ துணையா ’கக் கூறிய தமிழ் என்ற தோடரிலிருந்து, வாழ்வெனும் கடலில் வீழ்ந்து வருந்தும் மனித குலம் துணையெனக் கோள்ளத்தக்க உயிர்த்துணைவன் விழுத்துணைவன் அமிர்தலிங்கப்பெருமான் ஒருவனே என்று உணரலாகும். அத்துணையே மேய்த்துணை. வேறு வேறாக நாம்

கருதிவருகின்ற பதவியோ, பணமோ, பாரறியும் புகழோ நமது உயிர்க்குத் துணையாவன என்று எண்ணுவது அறியாமை.

' மத்தயானை ஏறிமன்னர் சூழ வருவீர்காள் !
சேத்தபோதில் ஆருமில்லை சிந்தையுள் வைம்மின்கள் '

என்பது சுந்தரர் செந்தமிழ் அல்லவா ? இத்துணையின் விழுப் பத்தை நமக்குக் காட்டுகின்றார்கள் சுந்தரமூர்த்தி அடிகள்.

அபிராமிபட்டர், அபிராமி அம்மையையே விழுத்துணையாக நம்பிப் பரவி நலம் பெற்ற வரலாறும் இங்கு எண்ணத்தக்கது.

' உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம் உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்க மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கோடி மென்கடிக் குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி அபிராமி என்றன் விழுத்துணையே '

என்பது அபிராமி அந்தாதியின் முதல் திருப்பாடல்.

**அருள் அரசு :**

இத்துணை அருள்நலம் போதிந்த திருநகராகிய திருக்கட வூர்த் திருத்தலத்தே ஓங்கும் அமிர்தகடேசுவரர் திருக்கோயில் தருமபுர ஆதீனத்துக்குச் சோந்தமான இருபத்தேழு திருக் கோயில்களில் ஒன்றாகும். இப்போது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதான மாக வீற்றிருப்பவர்களும், சமயம், சமூகம், மோழி, ஆலயத் திருப்பணிகளையே சிறந்து புரிந்து அருள் அரசு ஓச்சுபவர்களு மாகிய இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிர மணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருக்கடவூர்ப் பெருமானிடத்தில் இதயம் தோய்ந்தவர்கள். அபிராமித்தாயினிடத்தில் அளவற்ற அன்பு பூண்டவர்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானமவர்கள் 1957 ஆம் ஆண்டில் திருக் கோயில் திருப்பணிகளைச் சிறக்கச் செய்து குடமுழுக்கு நிகழ்த்தத் திருவுளம் கோண்டார்கள்.

**குடமுழுக்கு :**

இராசகோபுரங்கள், சுவாமி திருக்கோயில், அம்பாள் திருக் கோயில், திருக்குளம், சுற்றுத் தளவரிசை முதலியன திருந்தின.

கண் கவர் சிற்பங்களும் வண்ண ஓவியங்களும் நிறைந்த கலைக் கூடம் ஆயின. எல்லாமூர்த்தங்களும் மருந்துசார்த்தப்பெற்றன. ஜீரணோத்தாரணம் புரிவித்து குடமுழுக்கு நிகழ்த்த ஆணை யிட்டார்கள். திருவருளும் அருளாணையும் குருவருளும், துணைநிற்கச் செயலாயிற்று. ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமியும், ஸ்ரீ அபிராமி அம்மையும் முன்னின்று திருப்பணிகளை ஏற்றுக் கொண்டார்கள். ஹேவிளம்பி௵ சித்திரைமீ 9௨ (21-4-57) ஞாயிற்றுக்கிழமை காலை மணி 9-15 க்குமேல் 11-30 க்குள் குடமுழுக்கு விழா. தமிழகத்துச் சைவர் முதலிய மெய்யன்பர் களெல்லாம் தவறாது தரிசித்து இருமைப்பயனும் எய்தி இன்புறும் வாய்ப்பு இது. ஸ்ரீ காலசங்காரக் கடவுளை வணங்கி வாழ்நாள் பெருக்கும் வகையில் அன்பர் கூட்டம் கோடானுகோடியாகக் கூடி வழிபடும் இக் குடமுழுக்கு நாளிலே. அதனை ஒட்டிச் சைவ சித்தாந்த மாநாடு நிகழ்கின்றது. எல்லாம் 'கண்ணுக்கினிய பொருளாகிக்' குருஞானசம்பந்தர் கரத்து வந்து தருமை ஆதீனத்து ஆன்மார்த்த மூர்த்தியாக எழுந்தருளி யிருக்கின்ற சொக்கலிங்கமும் அமிர்தலிங்கமுமாகிய ஞானமூர்த் தங்களின் திருவருள் விரிவே என்பது துணிவு.



உ

சிவமயம்

# கும்பாபிஷேக விளக்கம்



சிவாலயங்களைக் கட்டுதலுக்கும், ஆகம விதிப்படிக் கும்பாபிஷேகம் செய்தலுக்கும் இலட்சக்கணக்காகப் பொருள் செலவு செய்தல் பொருந்துமா என்று இன்று சிலர் ஆராயாது கேட்கிறார்கள். சிவாலய தத்துவங்களையும், கும்பாபிஷேக தத்துவங்களையும் அறிந்தவர்கள் அவ்வாறு கூறார். யாகசாலைக்கு இவ்வளவு ஆடம்பரம் ஏன் என்று கேட்கிறார்கள். உலகியலில் சாதாரணமான ஒருவர் வரவேற்கப்படும்போது எவ்வளவோ செலவு செய்யும் நாம், பெருமைக்கெல்லாம் பெருமை வடிவாகிய தேவாதி தேவன் எழுந்தருளும் யாகசாலைக்கு நாம் எவ்வளவு செய்தாலும் தகுமல்லவா? அவற்றை அறியாமையே பெரும் பிழை. சிவாலயத்தின் அமைப்பு முறை குறித்தும், கும்பாபிஷேக தத்துவமுறை குறித்தும் சைவாகமங்கள் கூறும் கிரியை விளக்கங்கள் அதன்பொருட்டு இங்கே சுருக்கித்தரப்பெறுகின்றன.

**சிவாலய தத்துவம் :**

ஆலய அமைப்பு இரண்டுவிதம் ஒன்று சரீர அமைப்பையொட்டியது. சத்த தாதுக்களின் நிலைமை முதலியவற்றை முன்னதாலும், உள்ளத்தின்கண் சொல்லாயும் பொருளாயும் அமைந்துள்ள ஒவ்வொரு பொருளையும் பற்றி பின்னதாலும் அறியலாம்.

சிவாலயங்களில் கருப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மகா மண்டபம். ஸ்நபன மண்டபம் (நீராட்டு மண்டபம்), ஸ்தம்ப மண்டபம், நிருத்தமண்டபம் முதலியனவும் ஐந்து அல்லது மூன்று பிரகாரங்களும், கோபுரம், யாகசாலை, நந்தி, பலிபீடம், துவஜஸ்தம்பம், முதலியவைகளும், முக்கியமாகக் காணப் படுவனவாகும்.

தேகமாகிய ஆலயத்துள்ளும், மூலாதாரம் சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை என ஆறு ஆதாரங் களும் அறியப்படும்.

மற்றோரு வகை உடலில் தலை, கழுத்து, மார்பு, நாபி, பாதம் என ஐந்து பிரிவுகளுள்ளன. சிவாலயங்களின் கருப்பங்கிரகம் தலை, அருத்த மண்டபம் கழுத்து, மகாமண்டபம் மார்பு, யாகசாலை நாபி, கோபுரம் பாதமாகும்.

**சிவாலய தரிசன விதி :**

சிவாலய தரிசனம்செய்ய விரும்புவோர், அகத்தும் புறத்தும் தூயராய்ச் சிவச்சின்னங்களணிந்து சிவநாமத்தை உச்சரித்துக் கொண்டு சென்று, தூலலிங்கமாகிய கோபுரத்தை வணங்கி நமஸ்கரித்து, உள்ளே சென்று மெல்லப் பிரதக்ஷிணம் செய்து சந்நிதியில் நமஸ்கரித்து, துவாரபாலகரை வணங்கி பின் திரு நந்திதேவரையும் வணங்கி, சிவபெருமானை தரிசிக்க அனுமதி பெற்று உள்ளே சென்று, விக்னேசுவரரை வணங்கிக் குட்டிக் கொண்டு தாழ்ந்து தோத்திரம் பண்ணக்கடவர். பின் சிவ சந்நிதியை அடைந்து அஞ்சலி செய்து திருவருட்பாக்களை ஓதி பின் சபாபதி, தக்ஷிணாமூர்த்தி, சோமாஸ்கந்தர், சந்திரசேகரர் சுப்பிரமணியர் முதலிய மூர்த்திகளையும் நால்வரையும் வணங்கி துதிக்கக்கடவர். பின் அம்மை சந்நிதி அடைந்து வணங்கி, சண்டேசுவரர் சந்நிதி அடைந்து வணங்கி, மூன்று முறை கைதட்டிச் சிவதரிசனம் பலன் தரும்படி பிரார்த்திக்கக் கடவர். அதன் பின் நந்திதேவரை வணங்கி விடைபெற்று வீட்டுக்குச் செல்லக்கடவர்.

சிவாலயத்திற்குச் செல்வோர் தங்கள் தகுதிக்கேற்ப பழம் முதலியன கொண்டு சென்று அருச்சிப்பித்து விபூதிப் பிரசாதம் பெறக்கடவர். ஒன்றும் இயலாதவர் சந்நிதியில் கிடக்கும் சேத்தை முதலியவற்றை அப்புறப்படுத்தி இயன்றதொண்டு செய்யக்கடவர்.

**கும்பாபிஷேக மகத்துவம் :**

கும்பாபிஷேகம் பெருவிழா அல்லது பெருஞ்சாந்தி எனப் டும். " கபாலீச்சரமமர்ந்தான் பெருஞ்சாந்தி காணாது போதியோ

பூம்பாவாய் '' எனவரும் ஞானசம்பந்தப்பெருமான் திருவாக்கானுமுணர்க. கும்பாபிஷேகம் என்பது கும்பத்திலுள்ள நீரினுல் அபிடேகித்தலாம்.

**கும்பம் சிவசொரூபம் :**

கும்பவஸ்திரம் தோல், மேல்பூசிய சேம்மண் இரத்தம், கும்பத்துமண் மாமிசம், உதகம் மேதை, கூர்ச்சம் எலும்பு, மேல்சுற்றிய நூல் நரம்பு, கும்பத்திலிடும் போன் பூ முதலியன வீரியம். நியசிக்கப்பட்ட மந்திரம் உயிர், கீழிட்ட நேல் முதலிய தானியம் ஆசனம்' கும்பத்தை முதலில் கோயிலிலுள்ள பிம்பத்தின் சமீபத்தில் வைத்து தருப்பை, மாவிலை முதலியன கோண்டு மந்திரங்களைச் சோல்லிப் பிம்பத்தில் விளங்கும் மூர்த்தியை கும்பத்தில் ஆவாஹனம் செய்வார்கள். ஆவாஹனமாவது, மந்திரங்களைச் சோல்லிக் கும்பத்தில் அபிமுகமாகச் செய்தல். பிறகு அக்கும்பத்தை மங்கள முழக்குடன் யாகசாலைக்கு எழுந்தருளச் செய்வார்கள்

யாகசாலையானது 36 தத்துவ சோருபமானதும், சிவபெருமானது அஷ்ட மூர்த்த வடிவமானதும் ஆகும். யாகசாலையின் ஒன்பது குண்டங்களில், ஒன்பது அக்கினி வளர்க்கப்பேறும். சாதாரணமாகநாடோறும் ஆகவனீயம் தாக்ஷிணக்கினீயம்,காருகபத்தியம் என்னும் மூன்று அக்கினி வளர்க்கப்பேறும் என்பது "மூன்றுவகைக் குறித்த முத்தீச் சேல்வத்து '' எனவரும் திருமுருகாற்றுப்படை, அடிகளானும் உணர்க. அவை நாற்கோணம், முக்கோணம், அர்த்தசந்திரவடிவம் முதலாக ஒன்பது வடிவில் காணப்படும். அவ்வாறு வடிவு அமைப்பதற்குக் காரணங்கள் உண்டு. குண்டங்களைச் சுற்றி முறுக்கிய பசுந் தருப்பைகளைப்பரப்பி ஆல், அரசு முதலிய சமித்துக்களைக் குண்டத்தில் இட்டுக் கடைந்தேடுக்கப்பட்ட சுத்தமான அக்னி கோண்டு அதற்குரிய மந்திரங்களைச் சோல்லி அதி தேய்வங்களை மனதில் தியானித்து சுருக்கு சுருவம் என்னும் கருவிகளைக் கோண்டு நேய் முதலியன சோரிந்து அக்கினி வளர்ப்பார்கள். இங்ஙனம் மந்திரம், கிரியை, பாவனை மூன்றினுலும் வளர்க்கப்படும். அக்கினியிலிருந்து எழும் புகையும், வேதவோலி, சிவாகம ஒலி தமிழ்மறைஒலி, இவற்றுடன் உத்தம மேய்யன்பர்கள் நல்லேண்ணங்களும், எங்கும் வியாபித்து இருக்கிறஇறைவனது

அருட்சக்தியைத் தூண்டி கும்பத்தில் பிரகாசிக்கச் செய்யும். அப்போது அக்கும்பம் தெய்விக சக்தி கலைகள் நிரம்பியதாகும். மின்சாரத்தைச் செலுத்த செப்புக்கம்பி முதலியனவே தகுதி உடையன ஆதல் போல தருப்பை நுனி மாவிலை முதலியனவும் மந்திரங்களுடன் கூடிய வழி சிவசக்தியாகிய மின்சாரத்தைச் செலுத்தக்கூடியன. ஆதலின் அவற்றைக் கைக்கொள்ளு கிறுர்கள் என்பதனையும் நுண்ணிதின் உணர்ந்துகொள்க.

இவ்வாறு, யாகசாலையில் நடைபெறவேண்டிய கிரியைகள் முற்றுப்பெற்றவுடன் மீண்டும் தெய்விக சக்தி ஆலயத்திலுள்ள பிம்பத்தினிடமாக அமையவேண்டி, அச் சக்தியைச் செலுத்தும் சக்திவாய்ந்த தருப்பைக் கயிற்றின்வழி, அச் சக்தியைப் பிம்பத்தில் சேர்ப்பித்து, கும்பத்தில் உள்ள நீரினுல், சிகரங்களிலும் பிம்பத்திலும், அபிடேகம் செய்வார்கள். இதுவே கும்பாபிடேகம்.

யாகாக்கினி, ஆல், அரசு, புரசு முதலிய சமித்துகொண்டு வளர்க்கப்படுவது. நெய், பால், பழம் முதலியனவும் சொரிவார்கள். தைலம் வடிப்பவர்கள் ஒருவகை விறகு கொண்டே காய்ச்சி வடிக்கின்றுர்கள். வேறுவகை விறகானுல் தைலம் குணம் கெட்டுவிடும் என்பது அவர்கள் துணிபு. சூடு ஒன்று போல் நமக்குக் காணப்பட்டாலும், விறகுக்குத் தக்க குணம் தருகிறது என்பது தெளிவு. துரியோதனன் ஏவலால் காளமாமுனி ஆபிசார ஓமம் வளர்ப்பதற்கு விஷமூலிகைகளைச் சமித்தாகக் கொண்டார் என்பதும், அதற்குத்தக அக்னியிலிருந்து பூதம் தோன்றியது என்பதும், பாரதத்தில் கூறப்பெற்றுள்ளன.

அஷ்டபந்தனம் :

ஆலயத்தில் உள்ள பிம்பங்கள் அசைந்தாலும் கீழ் நோக்கினுலும் மேல் நோக்கினுலும் மக்கட்கும் அரசாங்கத்துக்கும் நன்று அன்று. ஆதலின் அப்பிம்பங்கள் அசையாமல் நேரே பார்த்திருக்கும்படி கொம்பரக்கு முதலிய எட்டுப் பொருள் கொண்டு இடித்த மருந்தைப் பீடத்தைச்சுற்றிப் பதியவைத்தல்.

சொர்ணபந்தனம் :

முன் கூறியபடி நேரே இருப்பதற்காகத் தங்கச் சுருள் கொண்டு பதிய வைத்து கெட்டிப்படுத்தலாம்.

**மகாபிஷேகம் :**

கும்பாபிஷேகம் ஆனவுடன் செய்ய வேண்டிய கிரியை, இறைவனைப் பிம்பத்திலிருந்து கும்பத்திலும், கும்பத்திலிருந்து பிம்பத்திலும் ஆவாகனம் செய்த முறையால் விளைந்த களைப்புத் தீருவதாகப் பாவித்து, மிகுதியான அபிஷேகத் திரவியங்களால் அபிஷேகித்து நன்கு பக்குவமான நிவேதனங்களை, நிவேதித்து உபசரிப்பதாம். இதனை 'மகாஹவிர் நிவேதனம்' எனக்கூறுவதுண்டு. கும்பாபிஷேகத்திற்கு முன் பிம்பத்திற்குக் காப்புநாண் அணிவார்கள். கும்பாபிஷேக தினத்திலிருந்து 45-வது நாள் காப்பு நாண் அகற்றுவார்கள். கிரியை பூர்த்தியாகும்.

**யாகசாலை :**

யாகசாலா என்ற வடமொழிச் சொல்லில் உள்ள யகரம் யக்ஞத்தையும், ககரம் செல்லுதலையும், சகரம் சுகத்தையும், லகரம் லயத்தையும் குறிப்பதால், யாகசாலை என்ற சொல்லுக்கு ஞான யாகத்தால் லயத்தானத்தில் சுகத்தின்பொருட்டுச்செல்வது என்று பொருளாகும். எனவே ஞான யாகம் செய்வதற்குரிய ஸ்தானம் யாகசாலையாகும்.

யாகசாலை ருத்ரசூத்திரம், விஷ்ணுசூத்திரம், பிரமசூத்திரம், கணசூத்திரம், கலாசூத்திரம், மனுசூத்திரம், ரவிசூத்திரம், பங்க்தி சூத்திரம் என எண்வித பேதமாகும். பங்க்தி சூத்திரத்துக்குத் தசசூத்திரமெனவும் பெயர்.

யாகசாலையில் கிழக்கில் நாற்கோண குண்டமும், அக்னி திக்கில் அரசிலை குண்டமும், (யோனி குண்டமும்) தெற்கில் அர்த்த சந்திர குண்டமும், நிருதியில் திரிகோண (முக்கோண) குண்டமும், மேற்கில் விருத்த குண்டமும், வாயு திக்கில் அறுகோண குண்டமும், வடக்கில் பத்ம குண்டமும், ஈசானத்தில் எண்கோண குண்டமும், ஈசான திக்கிற்கும், கிழக்கு திக்கிற்கும் மத்தியில் பிரதான குண்டமும் போடப்பெறும்.

நாற்கோண குண்டம் பிருதிவி தத்துவமாகும். அரசிலைக் குண்டம் நியதி மாயாதத்துவமாகும். அது சீவனைக் குறிக்கும். அர்த்த சந்திர குண்டம், அப்பு தத்துவமாகும். முக்கோண குண்டம், தேயு தத்துவமாகும். அறுகோண குண்டம், வாயு தத்துவமாகும். விருத்த குண்டம், ஆகாய தத்துவமாகும்.

பத்ம குண்டம், கலா தத்துவமாகும்; இது சூரியனைக் குறிக்கும். எண் கோண குண்டம், காலதத்துவமாகும். இது சந்திரனைக் குறிக்கும். விருத்த குண்டமாகிய பிரதானகுண்டம், சிவதத்துவ மாகும்; இது சிவபிரானைக் குறிக்கும். ஆதலால் யாகசாலை யானது 36 தத்துவ சோருபமானதும் சிவபிரானது அஷ்டமூர்த்த வடிவமானதுமாகும்.

இங்ஙனம் கூறிய நாற்கோணமாகிய குண்டங்களில் முறையே அஷ்ட மூர்த்திகளாகிய க்ஷமா மூர்த்தி, மகாதேவர், சர்வர், ஈசானர், பசுபதி, உருத்திரர், உக்கிரர், பீமர் எனுமிவர்களும், முறையே இவர்களுக்கு மூர்த்திமான்களான தத்புருஷர், இருதய மூர்த்தி, அகோரர், சிகாமூர்த்தி, கவசமூர்த்தி, சத்யோஜாதர், வாமதேவர், சிரசுமூர்த்தி, பரசிவம், எனும் இவர்களும் பூசிக்கப் பெறுவார்கள்.

இனி குண்டங்களில்பூசிக்கப்பெறும் அக்னிவகையாவது:

அக்கினியானது, வைசுவானராக்கினி, சிவாக்கினி, என இருவகைப்படும். வைசுவானராக்கினி, தேவதாத்மகபாவ மில்லாது, ஜாடராக்னி ருபமுடையதாகும். தேவதாத்மக பாவ முடையதாய்சிவருபமாய்இருக்கும் யாகம், கர்மயாகம் ஞானயாகம் என இருதிறப்படுவதால் கர்ம யாகத்தில், வைசுவான ராக்கினியும் ஞானயாகத்தில் சிவாக்கினியும், பூசிக்கப்பெறும். நாமகரணம் வரை நம்ஸ்கரிக்கப்பெறுவது பாலாக்னியும் விவாகம்வரை நமஸ்கரிக்கப்பெறுவது விருத்தாக்கினியும் ஆகும். சிவாக்கினி அங்கியும் ஏனையவை அங்கமுமாகும். யாகசாலையில் போடப் பெறும் கண்டங்களும், தனித்தனியே ஒவ்வொன்றும் சிவ சோருபமாகும் முறையைக் கூறுதும்.

குண்டங்கள் சிரசு, இருதயம், நாபி, கண்டம், யோனி, மேல் மேகலை, நடுமேகலை, கீழ்மேகலை, பரிஸ்தரணம் எனும் ஒன்பது உறுப்புக்களை உடையன. இவற்றுள் பரிஸ்தரணம் நீங்கலாக எட்டுறுப்பும், அஷ்ட மூர்த்தி சோருபங்களாகும். குண்டத்தின் சிரசு அக்னியாகும். நடுவிலுள்ள கர்ணிகையோடு கூடியபத்மம் இதயமாகும். அந்தப் பத்மத்துக்கு வேளியே வட்டவடிவமாய் மூன்றங்குல உயரத்தில் செய்யப்படுவது நாபியாகும். குண்டத்தின் உயரத்தில் நடுப்பாதியில் ஓரங்குலத்தில் கர்ணம்

கங்கணம்போல் செய்யப்பட்டது, கண்டமாகும் கண்டத்தின்கீழ் இரண்டங்குல நுனியும், கண்டத்தின்மேல் மேல்மேகலை பரியந்தம் நீண்டு மேல்மேகலையின் அரசிலையின் அடிபோல் நாலங்குல அகலமும், இரண்டு அல்லது ஓரங்குல உயரமும் உடையதாகச் செய்யப்பெறுவது யோனி யாகும். இது கண்ட பரியந்தம் நீண்டு பன்னிரண்டு அங்குலம் நீளமுள்ளதாகவும் செய்யப் பெறலாம். குண்டவடிவில் மேலும் அதன்கீழும், அதன்கீழுமாக முறையே 4, 3, 2 அங்குல உயரமும் அகலமுமாய்ச் செய்யப் பெறுவன மேகலைகளாகும். யோனி குண்டத்திற்கு யோனியும், பத்மகுண்டத்திற்கு இருதய கமலமும் இரா.

பரிஸ்தரணமாவது குண்டத்தைச் சுற்றிப் போடப்பெறும் தர்ப்பைகளாகும். இவை பசுமையான 30 தருப்பைகளினாலே சடைபோல் பின்னப்பட்டதாய் அல்லது முறுக்கப் பட்டதாய் ஓரங்குல அளவில் வலமாகப் போடப்பெற்ற முடியை உடைய தாக இருக்க வேண்டும். பரிஸ்தரணம் விஷ்டரம் என்று சொல்லப்பெறும்.

இனி குண்டத்தில் சாங்க உபாங்க பிரத்தியங்கங்களாவன:- அக்னி சாங்கமும், மேகலைகள் உபாங்கமும், பரிஸ்தரணம் பிரத்யங்கமும் ஆகும். இனி குண்டத்தில் பஞ்சாவரணங்களைக் கூறுதும்

முதலாவரணம் அக்னி, இரண்டாமாவரணம் மேல் மேகலை, மூன்ருமாவரணம் நடுமேகலை, நான்காமாவரணம் கீழ்மேகலை, ஐந்தாமாவரணம் பரிஸ்தரணமாகும். இவ்வாறு குண்டங்கள் சிவ சொருபமும் சிவாலய சொருபமுமாய் இருத்தல் அறிக.

இனி யாகத்தில் உபயோகப்படுத்தப்பெறும் ஹோம சாதன மான சுருக்கு, சுருவம் என்னும் கருவிகளில் சுருக்கு என்பது கலசம், கண்டிகை, வேதிகை, கண்டம், முகம், பிலம், மேகலை, ஆச்யசரணி தண்டம் என்னும் உறுப்புக்களை உடையதாகும். சுருவமாவது விருத்தம் நேய்த்தாரை கண்டிகை புஷ்கரங்களோடு கூடியதாகும்.

---

உ

சிவமயம்

## அபிராமிபட்டர் அருளிச்செய்த

# அபிராமி அந்தாதி

உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம் உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்க மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி அபிராமி என்றன் விழுத்துணையே.

துணையும் தொழுந்தெய்வ மும்பெற்ற தாயும் சுருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்ட வேரும் பனிமலர்ப்பூங்
கணையும் கருப்புச் சிலையுமென் பாசாங் குசமும் கையில்
அணையுந் திரிபுர சுந்தரி யாவ தறிந்தனமே.

கருத்தன எந்தைதன் கண்ணன வண்ணக் கனகவெற்பிற்
பெருத்தன பாலழும் பிள்ளைக்கு நல்கின பேரருள்கூர்
திருத்தன பாரமும் ஆரமும் செங்கைச் சிலையும் அம்பும்
முருத்தன மூரலும் நீயுமம் மேவந்தென் முன்னிற்கவே.

தண்ணளிக் கென்றுமுன் னேபல கோடிதவங்கள் செய்வார்
மண்ணளிக் குஞ்செல்வ மோபெறு வார்மதி வானவர்தம்
விண்ணளிக் குஞ்செல்வ மும்மழி யாமுத்தி வீடுமன்றோ
பண்ணளிக் குஞ்சொற் பரிமள யாமளைப் பைங்கிளியே.

வவ்விய பாகத் திறைவரும் நீயும் மகிழ்ந்திருக்கும்
செவ்வியும் உங்கள் திருமணக் கோலமும் சிந்தையுள்ளே
அவ்வியந் தீர்த்தென்னை ஆண்டபொற் பாதமு மாகிவந்து
வெவ்விய காலனென் மேல்வரும் போது வெளிநிற்கவே.

ஏத்தும் அடியவர் ஈரேழ் உலகினை யும்படைத்தும்
காத்தும் அழித்தும் திரிபவ ராம்கமழ் பூங்கடம்பு
சாத்துங் குழலணங் கேமண நாறுநின் தாளிணைக்கென்
நாத்தங்கு புன்மொழி யேறிய வாறு நகையுடைத்தே.

இழைக்கும் வினைவழி யேஅடுங் காலன் எனைநடுங்க
அழைக்கும் பொழுதுவந் தஞ்சலென் பாய்அத்தர்
சித்தமெல்லாம்
குழைக்கும் களபக் குவிமுலை யாமளைக் கோமளமே
உழைக்கும் பொழுதுன்னையே அன்னையேஎன்பன் ஓடிவந்தே.

வந்தே சரணம் புகுமடி யாருக்கு வானுலகம்
தந்தே பரிவொடு தான்போ யிருக்கும் சதுர்முகமும்
பைந்தே னலங்கல் பருமணி யாகமும் பாகமும்பொற்
செந்தேன் மலரும் அலர்கதிர் ஞாயிறும் திங்களுமே.

வாழும் படிஒன்று கண்டுகொண் டேன்மனத்தேயொருவர்
வீழும் படியன்று விள்ளும் படியன்று வேலைநிலம்
ஏழும் பருவரை எட்டுமெட் டாமல் இரவுபகல்
சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே.

நாயகி நான்முகி நாரா யணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதி நச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கி என்(று)
ஆயகி யாதி யுடையாள் சரணம் அரணமக்கே.

வையம் துரக மதகரி மாமகு டம்சிவிகை
பெய்யும் கனகம் பெருவிலை யாரம் பிறைமுடித்த
ஐயன் திருமனை யாளடித் தாமரைக் கன்புமுன்பு
செய்யுந் தவமுடை யார்க்குள வாகிய சின்னங்களே.

அருணும் புயத்துமென் சித்தாம் புயத்தும் அமர்ந்திருக்குந்
தருணும் புயமுலைத் தையனல் லாள்தகை சேர்நயனக்
கருணும் புயமும் வதனும் புயமும் கராம்புயமும்
சரணும் புயமுமல் லாறகண்டி லேனொரு தஞ்சமுமே.

தனந்தரும் கல்வி தரும் ஒரு நாளும்தளர்வறியா
மனந்தரும் தெய்வ வடிவுந் தரும்நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன எல்லாந் தரும்அன்ப ரேன்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாளபி ராமி கடைக்கண்களே.

கண்களிக் கும்படி கண்டுகொண் டேன்கடம் பாடவியில்
பண்களிக் குங்குரல் வீணையும் கையும் பயோதரமும்
மண்களிக் கும்பச்சை வண்ணமு மாகி மதங்கர்குலப்
பெண்களிற் றோன்றிய எம்பெருமாட்டிதன் பேரழகே.

தங்குவர் கற்பக தாருவின் நீழலில் தாயரின்றி
மங்குவர் மண்ணில் வழுவாப் பிறவியை மால்வரையும்
பொங்குவ ராழியும் ஈரேழ் புவனமும் பூத்தவுந்திக்
கொங்கிவர் பூங்குழ லாள்திரு மேனி குறித்தவரே.

குறித்தேன் மனத்திநின் கோலமெல்லாம் நின்குறிப்பறிந்து
மறித்தேன் மறலி வருகின்ற நேர்வழி வண்டுகிண்டி
வெறித்தே னவிழ்கொன்றை வேணிப் பிரானொரு
கூற்றைமெய்யில்
பறித்தே குடிபுகு தும்பஞ்ச பாண பயிரவியே.

விரவும் புதுமல ரிட்டுநின் பாத விரைக்கமலம்
இரவும் பகலும் இறைஞ்சவல் லாரிமை யோரேவரும்
பரவும் பதமும் அயிரா வதமும் பகீரதியும்
உரவும் குலிசமும் கற்பகக் காவும் உடையவரே.

சிறக்கும் கமலத் திருவேநின் சேவடி சென்னிவைக்கத்
துறக்கந் தருநின் துணைவரு நீயுந் துரியமற்ற
உறக்கந் தரவந் துடம்போ டுயிருற வற்றறிவு
மறக்கும் பொழுதென்முன் னேவரல் வேண்டும் வருந்தியுமே.

மெல்லிய நுண்ணிடை மின்னனை யாளை விரிசடையோன்
புல்லிய மென்முலைப் பொன்னனை யாளைப் புகழ்ந்துமறை
சொல்லிய வண்ணம் தொழுமடி யாரைத் தொழுமவர்க்குப்
பல்லிய மார்த்தெழ வெண்பக டூரும் பதந்தருமே.

விரும்பித் தொழுமடி யார்விழி நீர்மல்கி மெய்புளகம்
அரும்பித் ததும்பிய ஆனந்த மாகி அறிவிழந்து
சுரும்பிற் களித்து மொழிதடு மாறிமுன் சொன்னஎல்லாம்
தரும்பித்த ராவரென் றால்அபி ராமி சமயநன்றே.

கோமள வல்லியை அல்லியந் தாமரைக் கோயில்வைகும்
யாமள வல்லியை ஏதமி லாளை எழுதரிய
சாமள மேனிச் சகலக லாமயி றன்னைத் தம்மால்
ஆமள வுந்தொழு வாரெழு பாருக்கும் ஆதிபரே.

குழையைத் தழுவிய கொன்றையந் தார்கமழ் கொங்கைவல்லி
கழையைப் பொருத திருநெடுந் தோளுங் கருப்புவில்லும்
விழையப் பொருதிறல் வேரியம் பாணமும் வெண்ணகையும்
உழையைப் பொருகண்ணும் நெஞ்சிலெப் பொதும்
உதிக்கின்றவே.

உ

சிவமயம்

## திருஞானசம்பந்தசுவாமிகள் அருளிச்செய்த

# தேவாரம்

திருச்சிற்றம்பலம்

சடையுடை யானுநெய் யாடலா னுஞ்சரி கோவண
உடையுடை யானுமை யார்ந்தவொண் கண்ணுமை கேள்வனும்
கடையுடை நன்னெடு மாடமோங் குங்கட வூர்தனுள்
விடையுடை யண்ணலும் வீரட்டா னத்தர னல்லனே.

எரிதரு வார்சடை யானும்வெள் ளையெரு தேறியும்
புரிதரு மாமலர்க் கொன்றைமா லைபுனைந் தேத்தவே
கரிதரு காலனைச் சாடினா னுங்கட வூர்தனுள்
விரிதரு தோல்புகழ் வீரட்டா னத்தர னல்லனே.

நாதனும் நள்ளிரு ளாடினா னும்நளிர் போதின்கண்
பாதனும் பாய்புலித் தோலினா னும்பசு வேறியும்
காதலர் தண்கட வூரினா னுங்கலந் தேத்தவே
வேதம தோதியும் வீரட்டா னத்தர னல்லனே.

மழுவமர் செல்வனு மாசிலாத பல பூதமுன்
முழவொலி யாழ்குழன் மொந்தைகொட்ட முது காட்டிடைக்
கழல்வளர் கால்குஞ்சித் தாடினா னுங்கட வூர்தனுள்
விழவொலி மல்கிய வீரட்டா னத்தர ன்ல்லனே.

சுடர்மணிச் சுண்ணவெண் ணீற்றினா னுஞ்சுழல் வாயதோர்
படமணி நாகமரைக்கசைத்த பர மேட்டியும்
கடமணி மாவுரித் தோலினா னுங்கட வூர்தனுள்
விடமணி கண்டனும் வீரட்டா னத்தர னல்லனே.

பண்பொலி நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்
உண்பலி கொண்டுழல் வானும்வா னின்னொளி மல்கிய
கண்பொலி நெற்றிவெண் டிங்களா னுங்கட வூர்தனுள்
வெண்பொடிப் பூசியும் வீரட்டா னத்தர னல்லனே.

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்த

# தேவாரம்

திருச்சிற்றம்பலம்

பொள்ளத்த காயமாயப் பொருளினைப் போகமாதர்
வெள்ளத்தைக் கழிக்கவேண்டில் விரும்புமின் விளக்குத்தூபம்
உள்ளத்த திரியொன்றேற்றி யுணருமா றுணரவல்லார்
கள்ளத்தைக் கழிப்பர்போலுங் கடவூர்வீ ரட்டனாரே.

மண்ணிடைக் குரம்பைதன்னை மதித்துநீர் மையலெய்தில்
விண்ணிடைத் தருமராசன் வேண்டினால் விலக்குவாரார்
பண்ணிடைச் சுவைகள்பாடி யாடிடும் பத்தர்க்கென்றும்
கண்ணிடை மணியர்போலுங் கடவூர்வீ ரட்டனாரே.

பொருத்திய குரம்பைதன்னுட் பொய்ந்நடை செலுத்துகின்றீர்
ஒருத்தனை யுணரமாட்டீ ருள்ளத்திற் கொடுமைநீக்கீர்
வருத்தின களிறுதன்னை வருத்துமா வருத்தவல்லார்
கருத்தினி லிருப்பர்போலுங் கடவூர்வீ ரட்டனாரே.

பெரும்புலர் காலைமூழ்கிப் பித்தர்க்குப் பத்தராகி
அரும்பொடு மலர்கள் கொண்டாங் கார்வத்தை யுள்ளேவைத்து
விரும்பிநல் விளக்குத்தூபம் விதியினா லிடவல்லார்க்குக்
கரும்பினிற் கட்டிபோல்வார் கடவூர்வீ ரட்டனாரே.

தலக்கமே செய்துவாழ்ந்து தக்கவா றொன்றுமின்றி
விலக்குவா ரிலாமையாலே விளக்கத்திற் கோழிபோன்றேன்
மலக்குவார் மனத்தினுள்ளே காலனார் தமர்கள்வந்து
கலக்கநான் கலக்குகின்றேன் கடவூர்வீ ரட்டனீரே.

பழியுடை யாக்கைதன்னிற் பாழுக்கே நீரிறைத்து
வழியிடை வாழமாட்டேன் மாயமுந் தெளியகில்லேன்
அழிவுடைத் தாயவாழ்க்கை யைவரா லலைக்கப்பட்டுக்
கழியிடைத் தோணிபோன்றேன் கடவூர்வீ ரட்டனீரே.

திருச்சிற்றம்பலம்

௨

சிவமயம்

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த

# தேவாரம்




திருச்சிற்றம்பலம்

போடியார் மேனியனே புரிநூலொரு பாற்போர்த்த
வடியார் மூவிலைவேல் வளர்கங்கையின் மங்கையோடே
கடியார் கோன்றையனே கடவூர்தனுள் வீரட்டத்தேம்
அடிகே ளேன்னமுதே எனக்கார்துணை நீயலதே.

பிறையா ருஞ்சடையாய் பிரமன்றலை யிற்பலிகோள்
மறையார் வானவனே மறையின்போரு ளானவனே
கறையா ரும்மிடற்ருய் கடவூர் தனுள் வீரட்டத்தேம்
இறைவா என்னமுதே எனக்கார்துணை நீயலதே.

அன்ரு லின்நிழற்கீழ் அறம்நால்வர்க் கருள்புரிந்து
கோன்ருய் காலனுயிர் கோடுத்தாய்மறை யோனுக்கு மான்
கன்ரு ருங்கரவா கடவூர்த்திரு வீரட்டத்துள்
என்தா தைபெருமா னேனக்கார்துணை நீயலதே.

போரா ருங்கரியின் உரிபோர்த்துப்போன் மேனியின்மேல்
வாரா ரும்முலையா ளோருபாகம் மகிழ்ந்தவனே
காரா ரும்மிடற்ருய் கடவூர்தனுள் வீரட்டானத்(து)
ஆரா வேன்னமுதே எனக்கார்துணை நீயலதே.

மையார் கண்டத்தினுய் மதமாவுரி போர்த்தவனே
போய்யா தேன்னுயிருட் புகுந்தாயின்னம் போந்தறியாய்
கையா ராடரவா கடவூர்தனுள் வீரட்டத்தேம்
ஐயா என்னமுதே எனக்கார்துணை நீயலதே.

மண்ணீர் தீவேளிகால் வருபூதங்க ளாகி மற்றும்
பேண்ணோ டாணலியாய்ப் பிறவாவுரு வானவனே
கண்ணு ருண்மணியே கடவூர் தனுள் வீரட்டத்தேம்
அண்ணு என்னமுதே எனக்கார்துணை நீயலதே.

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

# குங்குலியக்கலய நாயனுர்

வாய்ந்தநீர் வளத்தால் ஓங்கி மன்னிய போன்னி நாட்டில்
ஏய்ந்தசீர் மறையோர் ஊர்மும் எயிற்பதி எறிநீர்க் கங்கை
தோய்ந்தநீள் சடையார் பண்டு தோண்டர்மேல் வந்த கூற்றைக்
காய்ந்தசே வடியார் நீடி இருப்பது கடவூ ராகும்.

வயலெலாம் விளைசெஞ் சாலி வரம்பெலாம் வளையின் முத்தம்
அயலெலாம் வேள்விச் சாலை அணையெலாங் கழுநீர்க் கற்றை
புயலெலாங் கமுகின் காடப் புறமெலா மதன்சீர் போற்றல்
சேயலெலாந் தோழில்கள் ஆறே சேழுந்திருக் கடவூரேன்றும்

பாலனும் மறையோன் பற்றப் பயங்கேடுத் தருளு மாற்ருல்
மாலுநான் முகனும் காணு வடிவுகோண் டேதிரே வந்து
காலனுர் உயிர்சேற் ருர்க்குக் கமழ்ந்தகுங் குலியத் தூபம்
சாலவே நிறைந்து விம்ம இடும்பணி தலைநின் றுள்ளார்.

சிலபகல் கழிந்த பின்பு திருக்கட வூரில் நண்ணி
நிலவுதம் பணியில் தங்கி நிகழுநாள் நிகரில் காழித்
தலைவராம் பிள்ளை யாருந் தாண்டகச் சதுர ராகும்
அலர்புகழ் அரசுங் கூட அங்கெழுந் தருளக் கண்டு.

மாறிலா மகிழ்ச்சி போங்க எதிர்கோண்டு மனையி லேய்தி
ஈறிலா அன்பின் மிக்கார்க் கின்னமு தேற்கு மாற்ருல்
ஆறுநற் சுவைகள் ஓங்க அமைத்தவர் அருளே அன்றி
நாறுபூங் கோன்றை வேணி நம்பர்தம் அருளும் பேற்ருர்.

—பேரியபுராணம்

## ஐந்தேழுத்து ஓதிய பயன்

அரும றைப்பய னுகிய உருத்திர மதனை
வருமு றைப்பேரும் பகலும்எல் லியும்வழு வாமே
திரும லர்ப்போகுட் டிருந்தவன் அனையவர் சிலநாள்
ஒருமை உய்த்திட உமைஇடம் மகிழ்ந்தவர் உவந்தார்.

—பேரியபுராணம்

---